(*b*) whether they have applied to the Government to register their union under the Trade Union Act?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) Yes, Sir.

(*b*) No, Sir.

* 243-A *Q.*—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Chief Minister be pleased to state—

(*a*) whether the Tamilnad Non-Gazetted Officers made any representations to the Government regarding their grievances in February, 1958;

(*b*) if so, the action taken thereon; and

(*c*) whether the Government will place a copy of the memorandum, if any, presented by them on the Table of the House?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*), (*b*) & (*c*) The Government have received a memorandum from the Tamilnad Non-Gazetted Government Officers' Union. The requests contained therein are under consideration. They do not see any necessity to place a copy of the memorandum on the Table of the House.

SRI N. K. PALANISAMI : ஸார், தபால் தந்தி ஊழியர்கள், பாங்கு குமாஸ்தாக்கள் டிரேட் யூனியன் சட்டப் பிரகாரம் பதிவு செய்யப் பட்டிருப்பதுபோல அதையும் பதிவு செய்வதற்கு என் ஆட்சேபம் ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இது சர்க்கார் ஆட்சேபணை செய்கின்ற காரியம் அல்ல. நான் பி. பகுதிக்குப் பதில் சொல்லியிருப்பதும் அவர்கள் பதிவு செய்துகொள்ள விண்ணப்பித்துக் கொள்ளவில்லை என்றேன்.

SRI T. T. DANIEL : Recently, the Kerala Government passed an order regarding the fixation of enhanced salary and allowances of some of the N.G.Os. of Kanyakumari district and our Government have questioned the propriety of that order on the ground that it was passed subsequent to the merger. Our Government have cancelled that order and have asked the N.G.Os. of that district to repay the amount which they have already received. Will the Government be pleased to reconsider the matter and pass necessary and proper orders?

THE HON. SRI C. SUBRAMANIAM : Yes, Sir, it is under consideration.

SRI K. RAMACHANDRAN : அவர்களது தீர்மானத்தில் முக்கியமாக கவனிக்கப்பட்டவைகள் எவை ? அவற்றைப் பற்றி அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுத்திருக்கிறது என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM: இவைகள் எல்லாம் பரிசீலனையில் இருக்கிறது. அந்தப் பரிசீலனை முடிந்த பிற்பாடு இந்தக் கேள்வியைப் போட்டால் பதில் சொல்லமுடியும்.

SRI N. K. PALANISAMI : அவர்களுக்கு ரூபாய்க்கு நான்கு படி அரிசி விற்றகாலத்தில் சம்பளம் தீர்மானிக்கப்பட்டது. இன்றைக்கு ரூபாய்க்கு ஒரு படி அரிசி விற்கிற காலத்தில் அவர்களுடைய சம்பளத்தை எந்த வகையில் உயர்த்தலாம் என்பதைப் பரிசீலனை செய்வதற்கு ஒரு பே கமிஷனை சர்க்கார் நிறுவி பரிசீலிப்பார்களா ?

8th March 1958]

THE HON. SRI C. SUBRAMANIAM : இதிலே முக்கியமான பிரச்னை அவர்களுடைய சம்பளத்தை எந்த வகையில் உயர்த்த முடியும் என்பது தான். அதைப்பற்றி நாமும் பரிசீலனை செய்து கொண்டிருக்கிறோம். நிதிக்கமிஷன் வேறு எப்படி பரிசீலனை செய்ய முடியும் ?

SRI S. LAZAR : நமது ராஜ்ய என்.ஜி.ஓ.க்களுடைய பிரச்னை தொடர்ந்து இருந்து வருகிறது. இதற்கு திருப்திகரமான முடிவு எப் போது ஏற்படும் என்று சர்க்கார் அறிவிக்குமா ?

THE HON. SRI C. SUBRAMANAIM : அதே மாதிரி நமது வாழ்க் கைப் பிரச்னையும் அப்படியேதான் இருந்து கொண்டிருக்கின்றன. இந்தப் பிரச்சினை எப்போது தீர்க்க முடியுமோ அப்போது தான் அதுவும் தீர்க்கப் படும்.

SRI M. KALYANASUNDARAM: இந்தப் பிரச்னையைத் தீர்ப்பதற்குப் போதுமான நிதி கிடையாது. அமைச்சர் அவர்கள் கூறின பதிலின் அர்த் தமும் அதுதான். அப்படியானால் மத்திய சர்க்காரிடம் இதன் மீது என்ன நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று வற்புறுத்தியிருக்கிறார்கள் ? நம் ராஜ்யத்தின் நிதி நிலைமையைச் சமாளிக்க என்ன யோசனை கூறி யிருக்கிறார்கள் ? இது சம்பந்தமாக நேஷனல் டெவலெப்மெண்டு கவுன்ஸி லிடம் ஏதாவது திட்டவட்டமாக யோசனை சமர்ப்பித்திருக்கிறார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இது பற்றி கனம் அங்கத் தினர் தனியாகவே ஒரு கேள்வி போட்டிருக்கிறார் என்று நினைக்கிறேன். அதற்குப் பதில் அளிக்கும்போது இவ்விவரங்கள் எல்லாம் தரப்படும்.

SRI K. ANBAZHAGAN : சென்ற ஆண்டு வரவு செலவுத் திட்டத்தில் துண்டு விழுவது காரணம் காட்டப்பட்டது. இவ்வாண்டு வரவு செலவுக் கணக்கிலேயே துண்டு விழாத நிலையுள்ளபோது இந்த ஊழியர்களுடைய சம்பளத்தையும் ஏன் உயர்த்தி யிருக்கக்கூடாது ?

THE HON. SRI C. SUBRAMANIAM : அதையும் சேர்த்தால் இன்னும் ஒரு துண்டு பட்ஜெட் கொடுக்க வேண்டியிருக்கும்.

SRI T. S. RAMASWAMY PILLAI : அவர்களுடைய மகஜரில் என்ன குறிப்பிட்டிருக்கிறார்கள் ? அதிலுள்ள முக்கியமான கோரிக்கைகள் என்ன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : அது பதினைந்து பக்கம் இருக் கிறது. எல்லாமே முக்கியம் என்று நான் கருதுகிறேன்.

SRI T. S. RAMASWAMY PILLAI : On a point of order இம்மாதிரியான கேள்விக்கு கனம் அமைச்சர் அவர்கள் நோட்டீஸ் வேண் டும் என்று பதில் சொல்லலாம். அல்லது பொதுஜன நலனைக் குறித்துச் சொல்ல மறுக்கலாம். இரண்டும் இல்லாவிட்டால் அமைச்சர் அவர்கள் என்னுடைய கேள்விக்குப் பதில் அளிக்கவேண்டும் என்று வற்புறுத்து கிறேன்.

MR. SPEAKER : உங்கள் கேள்வி மூலக் கேள்வியாக இருந்தால் கனம் அமைச்சர் அவர்கள் முழு பதிலையும் அச்சிட்டாவது கொடுக்கத்தான் வேண்டும். உப கேள்விக்குப் பதில் சொல்லத்தான்வேண்டும் என்று அமைச்சர் அவர்களை வற்புறுத்தமுடியாது.

SRI T. T. DANIEL : May I know whether the Government will be pleased to take steps to implement the order which they have passed recently giving Rs. 7 as increased Dearness Allowance to the N.G.Os. of Kanyakumari district, particularly those who are receiving Rs. 40 and less.

THE HON. SRI C. SUBRAMANIAM : A separate question may be put.

[8th March 1958

SRI A. GOVINDASAMY : மத்திய சர்க்கார் ஊழியர்களுடைய சம்பளத்தைப் பரிசீலனை செய்ய இரண்டு பே கமிஷன்களை நியமித்தார்கள். நமது சர்க்கார் ஒரு முதல் கமிஷனையாவது நியமித்து இதைப் பரிசீலனை செய்யக்கூடாதா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இதைப்பற்றி அங்கத்தினர்கள் முன்னாலேயே வைத்திருக்கிறேன். என்ன என்ன விஷயத்தில் செலவைக் குறைக்கலாம். கல்விக்கு எட்டு கோடி என்று இருப்பதை 4 கோடியாகக் குறைத்து இன்னொரு கோடியை சர்க்கார் ஊழியர்களுக்கு சம்பள உயர்வாகக் கொடுக்கலாம் என்று அவருடைய கட்சித் தலைவர் யோசனை கூறினால் அதைப்பற்றிக்கவனிக்கலாம்.

SRI D. S. AUTHIMOOLAM : மத்திய சர்க்கார் ஊழியர்களுக்கும், ராஜ்ய சர்க்கார் ஊழியர்களுக்கும் இடையே உள்ள சம்பள விகிதத்தில் ரொம்ப வித்தியாசம் இருப்பதால், அதை நீக்குவதற்கு நமது சர்க்கார் மந்திரிகளுடைய யோசனை என்ன ? இப்படிப்பட்ட சம்பள வித்தியாசம் இருப்பது நியாயமா இல்லையா என்பதைப்பற்றி நமது அமைச்சருடைய அபிப்பிராயம் என்ன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : என்னுடைய அபிப்பிராயம், சர்க்காருடைய அபிப்பிராயம், இந்த வித்தியாசம் இருக்கக்கூடாது என்பது தான். இதை எந்த முறையில் நீக்கலாம் என்பதைப்பற்றியும் ஆலோசனை செய்து பிளானிங் கமிஷனிடமும், மத்திய சர்க்காரிடமும் யோசனை கூறியிருக்கிறோம்.

SRI N. K. PALANISAMI : அவர்கள் வேலை செய்யக்கூடிய நேரத்தை ரெகுலரைஸ் செய்ய சர்க்கார் அத் திட்டம் பற்றி என்ன முடிவு செய்தார்கள் ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இப்போதே Hours of Work இருக்கிறது.

## *Home-sites for Harijans*

* 244 *Q.*—SRI M. JAGANNATHAN : Will the Hon. the Minister for Revenue be pleased to state the action taken so far to provide the Harijans of Avanipur village, Olakur firka in Tindivanam taluk, South Arcot district, with house-sites?

THE HON. SRI M. A. MANICKAVELU : The Collector of South Arcot is taking action to assign the land in R.S. No. 703 measuring 11·29 acres of Avanipur village for accommodating about 140 families of Harijans.

SRI M. JAGANNATHAN : கலெக்டர் மூலம் நிலத்தை ஹரிஜனங்களுக்கு குடிமனை வழங்க நடவடிக்கை எடுத்துக் கொள்ளப்படுகிறது என்று அமைச்சர் அவர்கள் குறிப்பிட்டார்கள். அந்த நிலம் புறம்போக்கு நிலமா ? அல்லது தனியார் நிலமா ? தனியார் நிலமாக இருந்தால் சர்க்கார் அதை ஆர்ஜிதம் செய்த பின்னர் தான் அதை வழங்க முடியும். அதற்கு இரண்டு மூன்று வருடம் காலதாமதமாகிறது. இதற்கு மத்தியில் ஹரிஜனங்கள் குடிமனைக்கு போதிய வசதியில்லாமல் பல நோய்களுக்கு ஆளாகி மடிந்து வருகிறார்கள். ஆகவே இதை உடனடியாக கவனித்து குடிமனை வழங்க அரசாங்கம் நடவடிக்கைகள் எடுக்குமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : அது, புறம்போக்கு நிலம் என்று நினைக்கிறேன். அதை நத்தம் புறம்போக்காய் மாற்றி ஹரிஜனங்களுக்குக் கொடுப்பதாக உத்தேசம். அதை நல்ல முறையில், சௌகரியமாக, சுகாதார முறையில் இந்த வீடுகள் அமைய வேண்டுமென்று, அதற்காக டவுன் பிளானிங் அனுமதியை எதிர்பார்க்கிறோம். அது வந்ததும் கூடிய சீக்கிரம் செய்யப்படும்.